# சி. சிவாஅருண்குமார் தொகுத்த அமுத மொழிகள்

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## ஆசை

1. ஆசையே எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படைக் காரணம் – புத்தர்.
2. மனிதனுக்கு ஆசையால் விருப்பமும் விருப்பத்தால் கோபமும், கோபத்தால் மயக்கமும், மயக்கத்தால் புத்தி நாசமும், புத்தி நாசத்தால் அழிவும் ஏற்படுகிறது. – பகவத் கீதை.
3. நாம் விரும்புவது நமக்குப் கிடைப்பதில்லை; எனவே கிடைப்பதையே நாம் விரும்புவோம். – காந்தியடிகள்.
4. வெற்றியை விட போராட்டமே இனிமையாயிருக்கிறது. – எட்மென்ட்பார்க்.
5. வணங்குகிறவன் வாழ்வான், நிமிர்ந்தவன் அழிவான் – வாரியார்.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## கற்பு

1. அழகு பெண்ணிற்குப் பெருமை தருகிறது; கற்பு அவளுக்கு அளவற்ற மதிப்பு தருகிறது; அடக்கம் அவளைத் தெய்வ மாக்குகிறது. – ஷேக்ஸ்பியர்.
2. ஒழுக்கமுள்ள பெண் கணவனுக்கு அரச மகுடம். – பைபிள்.
3. பெண்ணின் கற்பு கண்ணாடிப் பாத்திரம் போன்றது. – காண்டேகர்.
4. பெண்ணிக்குக் கற்பு என்பது கணவன் சொல்லுக்கு மாறுபடாமல் இருப்பது தான் – யாரோ.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## கணவன்

1. நீ உன் மனைவியை நேசித்தால், அவள் உறவினரையும் நேசிக்க வேண்டும். – இஸ்ரேல் பொன்மொழி.
2. ஒரு மனிதனின் நல்லதும், கெட்டதும் அன் மனைவி தான். – ஸ்பெயின் பொன்மொழி.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## காதல்

1. காதலில் தேனும் கசப்பும் கலந்தே இருக்கிறது. – பிளாட்ஸ்.

2. நற்குனம் கொண்ட பெண்ணின் காதலைப் பெற்றவன், ஒவ்வொரு தீய செயலையும் கண்டு நாணமடைவான். – வோகல்.

3. காதலின் தூதுவர்கள் கண்கள். – இலத்தீன் பழமொழி.

4. இசைக் கருவியைப் போல் காதலியை மீட்டி விட்டு, உயரே தூக்கி வைத்து விட முடியாது. – ஜப்பான் பொன்மொழி.

5. காதலின் கண்ணுக்கு ரோஜாதான் தெரியும் ; முட்கள் தெரியாது. – ஜப்பான் பொன்மொழி.

6. காதல் நோய்க்கு மாற்று மருந்துண்டு. அதுவே திருமணம். – ரோலண்டு.

7. காதல் விகாரங்கள் ஒரே மாதிரியானவை ; காதல் புரியும் மக்கள் தான் வெவ்வேறு வகையானவர்கள். – விமன்ஸ் கம் பானியன்.

8. சுலபமாக வெற்றி பெறும் காதலில் கவர்ச்சியில்லை ; தடைகள் தான் காதலுக்கு அதிக மதிப்பைக் கொடுக்கிறது. – வோகல்.

9. காதலைப் பொறுத்தவரை பெண் வீணையைப் போன்றவள் ; தந்திகளை மீட்கத் தெரிந்தவனுக்குத் தான் வீணை தன் ரகசியங்களை வெளியிடும். – பால்ஸாக்.

10. ஊனையும் உணர்வையும் உயிரையும் தாண்டி அப்பால் தொடரும் அன்பே காதல். – நாமக்கல் கவிஞர்.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## காலம்

1. இறந்த காலத்தைப் பற்றித் தெரிந்து கொண்டால், எதிர்காலம் தானாகப் புலப்படும். – கன்பூசியஸ் பொன்மொழி.

2. எதிர் காலத்தை நீ விரும்பினால் நிகழ் காலத்தில் ஒன்றும் மிச்சமில்லாமல் எல்லாவற்றையும் நீ தியாகம் செய்துவிட வேண்டும். – மாக்சிம் கார்க்கி.

3. நேற்றைய ஏட்டைப் புரட்டிப் பார் வாழ்க்கைக்கும் மக்களுக்கும் நீ கடமைப் பட்டிருப்பது புரியும். – கலீல் கிப்புரான்.

4. பணத்தை இழந்தால் குறைந்த இழப்பு ; நேரத்தை இழந்தால் எல்லாமே இழப்பு. – அர்மெனீயா பொன்மொழி.

5. நேரத்தை வீண் செய்யாதீர்கள் காலமே இறைவன். – சாயிபாபா.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## குடும்பம்

1. தன் சக்திக்கு மேலான குடும்பத்தில் பெண் கொள்கிறவன் தன் சுதந்திரத்தைவிற்று விடுகிறான்.

2. துன்பங்களை மனம் புண்படாதபடி மாற்றுவதே உண்மையான இல்லறம்.
– ஷெல்டன்.

3. ஆண்கள் விருட்சங்கள், பெண்கள் அதைத் தழுவி நிற்கும் மென்கொடிகள் குழந்தைகள்; குழந்தைகள் அக்கொடியிலேயே மலரும் மலர்கள். – இங்கர்சால்.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## குழந்தை

1. பயமின்றி வளர்க்கப்படும் பெண் குழந்தை பெருமை இல்லாமல் இறக்கும்.
– எஸ்தோனியா பொன்மொழி.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## சந்தேகம்

1. கோழையின் குணம் சந்தேகம். – ஷெர்பார்ட்.

2. துக்கத்தை விட மிகவும் நச்சு தோய்ந்தது சந்தேகம். – டென்காம்.

3. ஐயமுற்றவன் அழிவுற்றான். – கீதை.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## திருமணம்

1. உன் மனைவியைக் கண்களால் தேர்ந்தெடுப்பதை விடுத்து காதால் தேர்ந்தெடு.
– ரஷ்ய பொன்மொழி.

2. திருமணமாகும் முன் இரண்டு கண்களையும் திறந்து வைத்துக் கொள் ஆனபின் ஒன்றை மூடிக்கொள். – ஆபிரிக்கா பொன்மொழி.

3. மணவாழ்வு என்பது ஒரு சரித்திரப் புத்தகம்; அதன் ஏடுகளைப் புரட்டினால் சண்டையும் சமாதானமும் மாறி மாறி வரும். – அரு. ராமநாதன்.

4. திருமணம் என்பது வெறும் உடற் சேர்கை யன்று; அது உணர்ச்சிகளின் சேர்கை வாழ்க்கை என்பது உள்ளங்களின் சேர்கை. – காண்டேகர்.

5. காதலர்கள் திருமணம் செய்துக் கொண்டால், கனவு உலகம் மறைந்து உண்மை உலகம் புலனாகிறது. – ரோத்போன்.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## பெண்

1. மனமாரக் காதலிக்கும் பெண்கள் மத்தியில் ஆண்கள் பச்சைக் குழந்தைகள். – தாகூர்.
2. ஆயிரத்தில் ஒரு நல்லவனை அறிந்து கொள்ளவாம்; ஆனால் ஒரு பெண்ணை அறிந்து கொள்ள இயலாது. – இங்கிலாந்து பொன்மொழி.
3. வானின் அழகு விண் மீன்களில் உள்ளது ; பெண்ணின் அழகு கூந்தலில் உள்ளது. – இங்கிலாந்து பொன்மொழி.
4. வயதாகியும் கன்னியாய் இருக்கும் பெண் அஞ்சற் பெட்டியில் சேர்க்கப்படாத கடிதம். – இங்கிலாந்து பொன்மொழி.
5. கெட்டிகாரப் பெண், தான் காதலிப்பவனை விட்டுத் தன்னைக் காதலிப் பவனையே மனப்பாள். – செக்கோஸ்லோவியா.
6. பெண், ஆடவனுக்குக் காட்ட கூடிய ஆழ்ந்த அன்பு அவன் தன் கடமையைச் செய்வதற்கு உதவியாக இருப்பதே. – யாரோ.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## நம்பிக்கை

1. மனிதன் ஆவதும் நம்பிக்கையிலே; அழிவதும் நம்பிக்கையாலே. – எஸ். ஏ. பி.
2. முயற்சி இல்லாத நம்பிக்கை, கப்பல் இல்லாத கடல் யாத்திரை. – யாரோ.
3. மனதை விசாலப்படுத்தும் நம்பிக்கையே வாழ்வை வளப்படுத்தும். – யாரோ.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## மனைவி

1. மனைவி போடும் கணக்கு நான்கு; கவலையைக் கூட்டுபவள்; துன்பங்களைப் பெருக்குபவள்; பணத்தைப் கழிப்பவள்; நண்பர்களை வகுப்பவள். – ஷா.
2. அழகிய மனைவியை உடையவனுக்கு இரண்டு கண்களுக்கு மேல் தேவை. – இங்கிலாந்து பொன்மொழி.
3. பணிவற்ற மனைவி; பகைவர்க்கு ஈடாவாள். – இந்திய பொன்மொழி.
4. ஊமையான மனைவி கணவனிடம் அடிபடுவதே இல்லை. – பிரெஞ்சு.
5. மனைவியை ஆள்வதை விட, அரசு ஒன்றை ஆள்வது வெகு சுலபம். – இங்கிலாந்து.
6. மனைவியிடம் இல்லறம் என்னும் குடும்ப வாழ்விற்குரிய நற்குணங்கள்

அமைந்திராவிடில், அந்தக் குடும்ப வாழ்க்கை எவ்வளவு தான் சிறந்திருப்பினும் பயனற்ற வாழ்க்கையே யாகும். – திருவள்ளுவர்.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## வாழ்க்கை

1. மனித வாழ்வு; குழந்தையின் கையிலிருக்கும் முட்டை போன்றது.
   – ரூமேனியா பொன்மொழி.
2. வாழ்க்கை என்பது வழிபாடு; வாழ்க்கை என்பது கோயில் தியாகம் என்பது அதன் அடிப்படை. – வி. ஸ. காண்டேகர்.
3. வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சனைகளைச் சமாளிக்க உதவும் திறனே கல்வி.
4. வாழ்க்கையின் உண்மையான குறிக்கோள், அழிவில்லாத வாழ்வைத் தெரிந்து கொள்வதாகும்.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## மனிதன்

1. ஒரு மனிதனை அவனுடைய சூழ்நிலை உருவாக்குவது இல்லை. அவனுடைய மனம் தான் உருவாக்குகிறது.
2. மனிதனைக் கவனித்துப் பார் அவன் தான் ஓர் உயிருள்ள கதை. – விவேகானந்தர்.
3. மனிதன் பிறப்பது இன்பத்தில்; இறப்பது துன்பத்தில்; வாழ்வது செயற்கையில். – குரு.
4. தன்னை அடக்கப் பழகிக் கொண்டவன் புறத்தே உள்ள எதற்கும் வசப்பட்டவன் அல்லன். அத்தகைய மனிதனே நன்கு வாழத் தெரிந்தவன். – விவேகானந்தர்.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## பணம்

1. எப்படிப்பட்ட முட்டாளும் பணத்தைச் சம்பாதித்துவிடலாம். ஆனால் அதை ஒரு புத்திசாலி மட்டுமே காப்பாற்ற முடியும். – அமெரிக்கா பொன்மொழி.
2. பணம் இல்லாத பைக்கு வெறும் தோல் என்று தான் பெயர். – இங்கிலாந்து.
3. கடன் இல்லாதவன் பணக்காரன்; உடல் ஆரோக்கியம் உள்ளவனே செல்வன்.
   – யூகோஸ்லேவியா.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

- சி. சிவகாமசுந்தரிஅருண்குமார்.